**சுகேசன் :**—(பாடுகின்றான்.)

நித்த நிகழ்கின்ற நீடுலகின் மாந்தர்செய
லத்தனையு மீச னருள். (உருசு)

**மேதாநிதி:**—ஆ! அதற்கு ஐயமுண்டோ?—

**சயதுங்கன்:**—(சிதாநந்தனை நோக்கி) என்னருமைச் சிதாநந் தவீரனே! இவ்வயின்வருதி. (சிதாநந்தன் சமீபித்தலுமவனைத் தழுவிமுத்தமிட்டு) எமதன்பார் மருகனே! உன்னை யாம் இன்னரென் றறிகிலாமையாற் செய்த செயல்கட்கெல்லாம் மனம்வருந்துகின்றே மாதலிற் பொறுத்துக் கோடல்வேண்டும்!—

**சிதாநந்தன்:**—எந்தையார் சிறிது முன்னர்க்கூறியது போல எல்லா மிறைவனருளா யிருப்புழி, யாம் செய்யற் பாலன யாவுள? ஆதலி னெந்தம்பிரியமுள்ளமாமனரே! சயதுங்க வள்ளலே! தாங்களிதைக்குறித்துக்கவற்சியுறலொழிமின்!

**சத்தியப்பிரியன்:**—நாமேன் தாமதித்தல் வேண்டும்?

**சயதுங்கன்:**—தாமதமொன்றுமில்லை! ஏ! சோமதத்தா!

சோமதத்தன் வருகின்றான்.

**சோமதத்தன்:**—மகாராசா!

**சயதுங்கன்:** — நம்முடைய செல்வப்புத்திரி கலாவதி யிங்கே கல்யாண விலாசத்திற்குச் சீக்கிரம் வருமாறு கன்னிமாடக் காவலாட்டியரிடஞ் சொல்லிவிட்டுவா.—

[சோமதத்தன்போகின்றான்.

(சந்மதியைநோக்கி) என்ன? சந்மதியாரவர்களே! நாமும் நமது நண்பர் சுகேசவழுதியாரும் முகூர்த்தநிச்சயம் பண்ணி விவாகம் முடிக்கு முன்னரோ யவர்களிருவரு மொருவரை யொருவர்கண்டு காதல்கூர்ந்தன ரென்பது எம்பெருமான் ஏகாம்பரேசனது திருவருட் பிரேரகமே யன்றோ?

**சந்மதி:**—ஆமாம். அஃதுண்மைதான். யாங்களுமெங்கள் சிதாநந்தர் தேசசஞ்சாரமாய்ப் புறப்படும்போது அவர்க்கு இந்தச் சோணாட்டிற்குச் சேறலொழிகவென்று கூறியிருந்தும் அவர் இங்கேயேவந்து இவ்வாறெல்லாம் நிகழ்ந்திருத்தலையாலோசித்துப் பார்க்குமிடத்து இது ஜகதீசன் திருவருளே யென்பதை யாட்சேபிப்பவன் யாவன்?

**விகடவசநன்:** — அவன்றானுலோகாயதன்! உலோகாயதன்!!

(யாவரும் நகைக்கின்றார்கள்.)

பணிப்பெண்களிருபுறமுஞ் சூழ்ந்துவரக் கலாவதி
வாசந்திகை மாணிக்கமாலைகளோடு
பிரவேசிக்கின்றாள்.

**சயதுங்கன்:** — என்னருமைத்தாயே! கண்ணே! கலாவதி! இப்படிவா. (கலாவதி தந்தையாரருகிற்சேறலுஞ் சயதுங்கன் பலரையுஞ்சுட்டி) அம்மா! கலாவதி! சகலமும் உன்னிஷ்டப்படியே முடிந்தன! — அதோ அவ்விடத்திலிருப்பவர் உன்னுடைய மாமனாராகிய பாண்டிநாட்டரசர் சுகேசவழுதியார்!—அவர் சமீபத்திலுட்கார்ந்துகொண்டிருப்பவர்தாம் பாண்டியராசருடைய பிரதானமந்திரி சந்மதி யென்பவர்! —

**விகடவசநன்:** — உதோ உவ்விடத்திலிருப்பவர்தாம் உம்பிராணநாதர் சிதாநந்தர்!—இதோ இவ்விடத்திலிருப்பவர்தாம் விப்பிரசிகாமணி விதூஷகதிலகர் விகடவசநர்!—

(யாவரும் நகைக்கின்றார்கள்.)

**சயதுங்கன்:**—மற்று, இதோ இங்கிருப்பவர்தாமுனதுபிராணநாதர் சிதாநந்தர்தம் உயிர்நண்பர் சத்தியப்பிரியர்!—இனிமே லிவர்களெல்லோருந்தாமுனக்கு வேண்டியவர்கள்!

**விகடவசநன்:**—ஏன்? மகாராஜா! இன்றைக்கு அமாவாசியையன்றோ?

**மேதாநிதி:** — இன்றைக்கேதையா அமாவாசை? அதுவருகிறதற் கின்னு மேழெட்டுநாட் செல்லவேண்டுமே!

**விகடவசநன்:** — மகாராஜா! தாங்களே கேளுங்கள்! யான் இன்றைக்கு அமாவாசியை யென்கின்றேன்! நம்முடைய மேதாவிதியா ரில்லையென்கின்றார்!—எல்லாவற்றிற்கும் யானின்றைக்குப் பிரத்தியட்சமான அமாவாசியையே யென்றே நிரூபிக்கின்றேன்!—ஐயா! மேதாவிதியாரே! சபையோர்களே! சூரியனுஞ் சந்திரனுஞ் சேருந்தினம் அமவாசியை யென்னப்படும். அவ்வாறே யின்று சூரியவம்சத் தரசராகிய நம்முடைய ஜயதுங்கராஜரும், சந்திரவம்சத் தரசராகிய நம்முடைய சுகேசவழுதியாரு மிங்கே சேர்ந்திருக்கின்றார்களாகவே யின்று அமாவாசியைதான்!—

(யாவருங் கைகொட்டியார்த்து நகைக்கின்றார்கள்.)

பிராமணரிருவர் வருகின்றனர்.

**பிராமணர்:** — ஜயஜய விஜயீபவ! மகாராஜ! விவாகசாலையிற் புரோகிதர் முதலிய யாவரும்வந்து காத்துக்கொண் டிருக்கின்றார்கள்! தங்களுடைய வரவைத்தான் எதிர்பார்த்துக் கொண் டிருக்கின்றார்கள்!

**சயதுங்கன்:** — அப்படியானால் வழுதியாரே! சந்மதியாரே! நாம் சிதாநந்தருக்கும் கலாவதிக்கும் இப்பொழுதே விவாகத்தை நிறைவேற்றி விடலாமே!—(சபையிலுள்ளாரை நோக்கி) எனது பிரியசபையோர்காள்! தாங்களெல்லோரும் விவாகசாலைக்குச்சென்று எம்மைக் கனப்படுத்தல் வேண்டும்!

**சபையோர்கள்:**—ஆ! அப்படியே!

[சயதுங்கன், சுகேசன், சிதாநந்தன், கலாவதியாகிய விவர்களொழிய மற்றவர் யாவரும் போகின்றனர்.

(சிதாநந்தனுங் கலாவதியுஞ்சேர்ந்து நிற்கின்றனர்.)

**சயதுங்கன்:**—(பாடுகின்றான்.)

* "தேவர்கோ வறியாத தேவ தேவன்
செழும்பொழில்கள் பயந்துகாத் தழிக்கு மற்றை

* திருவாசகம்.

மூவர்கோ னாய்நின்ற முதல்வன் மூர்த்தி
மூதாதை மாதாளும் பாகத் தெந்தை
யாவர்கோ னெம்மையும்வந் தாண்டு கொண்டான்
யாமார்க்குங் குடியல்லோம் யாது மஞ்சோ
மேவினோ மவனடியா ரடியா ரோடு
மேன்மேலுங் குடைந்தாடி யாடு வோமே." (உகூ0)

[சயதுங்கன் போகின்றான்.

**சுகேசன்:**—(பாடுகின்றான்.)

தழையுமியல் பிற்றெனும் பத்தியுறு மனனுடைய
தரணியீர் தாமதமெவ
னழலிடை யகப்பட்டு மாழ்குறு புழுப்போல
வழியாது வருதிர்நம்மை
யுழையிருந் தருதிநமு முண்மைநெறி யிற்செல
வுறுப்பவற் பாடியேத்தி
விழைவுட னவன்றன தருட்கடலின் மேவிநனி
விளையாடி யாடுதுமரோ. (உகூக)

[சுகேசன் போகின்றான்.

**சிதாநந்தன்:**—(கலாவதியைக் கையிற்பிடித்துக்கொண்டு பாடுகின்றான்.)

மங்கைப் பருவமுற்றே வளர் இற்குமெஞ்
சிற்றறிவாந்
துங்கக் கவுமுதியை நனி தோயுங்
கலாதரனே
யெங்கும் விழியுடையாய் தடுத் தெம்மையாட்
கொண்டவனே
யெங்கள் பரசிவமே யுனை யெங்ஙனம்
வாழ்த்துதுமே? (உகூஉ)

[சிதாநந்தனுங் கலாவதியும் போகின்றனர்.



## நான்காங்களம்.

இடம்: காஞ்சியிலாத்தாநமண்டபம்.

காலம்: பிற்பகல்.

பாத்திரங்கள்: சயதுங்கன், சுகேசன், மேதாநிதி, சந்மதி, சுயம்பிரகாசர், விகடவசநன், ஆத்தாணிகர்கள், பிரபுக்கள், கனவான்கள் முதலாயினூர்.

(சிதாநந்தனும் கலாவதியுஞ் சிங்காதநத்திருக்கின்றனர்.)

**சிதாநந்தன்:** — (கலாவதியோடெழுந்து) மன்னர்காள்! மந்திரிகாள்! முறையோர்காள்! மற்றையோர்காள்! இப்பொழுது நீவிர்யாவருங்கூடி யெம்மிருவரையும் அரியாதனத் தமர்த்திச் சோணாட்டின தரசுரிமை கைக்கொண்டு அதனைப் பரிபாலிக்குமாறு கூறியாங்கே யாங்க ளிருவேமும் நடந்துகொள்ளச் சித்தமாயிருக்கின்றேம். சற்று முன்னர்ச் சந்மதியாரவர்கள் படித்த இராசநீதிப் பத்திரிகையிற் சொல்லியஒவ்வொருவிடயத்தினும் அணுத்துணையுந் தவறின்றி நடப்பான் முயல்கின்றேம். அன்னணமே வாக்குறுதியுஞ் செய்கின்றேம். இனி இறைவன் றிருவருளை முன்னிட்டு அவனடித்தாமரையே துணைக்கொண்டு எக்காரியத்தையு மியற்றுவேமாக. 'மன்னுயிரைத் தன்னுயிராமதிக்க' என்னும் நியாயத்தின்வண்ணம், எம்மைப் போலவே சகலமாந்தரையும் விரும்பிப் பாதுகாப்பேமாக. ஒப்புரவறிந்து உயிர்கள்பாற் கண்ணோடி யுலகோம்புவேமாக. (இருவரு மாதனத்தமர்கின்றனர்.)

(யாவருங் கைகொட்டி யார்க்கின்றனர்.)

**சுயம்பிரகாசர்:**—(எழுந்து ஆசீர்வதித்துப் பாடுகின்றனர்.)

மண்வளரு மானுடரு மற்றுமுள பல்லுயிருங்
கண்வளர்ந்து நாடோறுங் கவலையற்றுக் களிகூரத்

துந்துமியின் னியங்கறங்கத் தோகையர்க ணடமாட
வந்தியர்கள் வாழ்த்தெடுப்ப மாகதர்நின் றேத்தெடுப்ப
மாதவத்துப் பெரியோர்கண் மங்கலநற் போற்றிசைப்ப
வேதபுத்து வான்கனெனும் விமலர்கள்ப லாண்டிசைப்பத்
துங்கமிகுந் தமிழ்வாணர் சொற்சுவையும் பொருட்சுவையும்
பொங்குறும் பாட்டுரைப்பப் புரிவளைக ணின்றேங்கத்
திங்கணெடுங் குடைநிழற்கீழ்ச் சிலதியர்சா மரையிரட்டச்
சிங்காத னத்தமர்சி தாநந்தப் பெயருடையோய்!

எவ்வுயிருக் கெதுபற்றி யிடரெய்து மாயிடினு
மவ்வுயிருக் குறுதுணையா யருள்பொழியுந் திருவுள்ளம்!

அருந்தமிழ்தம் போலினிமை யார்ந்துதலை யன்பொழுகு [கு!
மருந்தமிழ்ச்சொற் பொருட்செறிவு றமர்ந்ததுநின் றிருவாக்

கன்றனைய குடிகட்குங் காரிகைக்கும் பொதுவன்றி
நின்றனக்கே யுரியதுகொ னின்மலநின் றிருமேனி!

ஆருயிர்யா வற்றினையு மளிக்கிற்பா மென்றுசொலி
யோருயிர்க்கே யுடலளித்தா யொப்புரவு மறிந்தனைகொல்?

குவிதனத்துக் கோதைநலார் கொடுமதவே டன்கணையாற்
றவிதரவா ளாதிருப்பாய் தண்ணளியு நிற்கிலைகொல்?

செங்குமுத விதழ்மடவார் சீரிதய கமலமெலாந்
தங்குதலா னிறைவனெனுந் தனிப்பெயரு முற்றனைகொல்?

திருந்துகழல் வேந்தர்தொழச் சினவேலோய் வீற்றினிதி
னிருந்தபெரு மங்கலநிற் கியம்புதலுஞ் சிறப்பேயோ?

மல்வென்றி யோடுமண மங்கலமும் யாம்பாடல்
செல்வென்ற கரமுடையாய் சிறிதேனும் புகழாமோ?

விதுநிகர் முகனுடை விமலசு குணவள
மதுரையெ ணகர்தனில் வளர்தரு மரசனே!
உவகையொ டுறுதிர முயர்வினி நகர்வதி
பவமகிழ் புரிகுவை பரசுறு சரசனே!

ஆரருளும் புரிவாய்நீஇ! ஆனந்தந் தருவாய்நீஇ!
வீரர்தமுள் வீரனுநீஇ! வேந்தர்தமுள் வேந்தனுநீஇ!

ஐயனீஇ! செய்யனீஇ!
ஆதிநீஇ! சோதிநீஇ!
நாதனீஇ! போதனீஇ!
அறிவனீஇ! இறைவனீஇ!

அதனுஅல்,

பொற்புறு மரகதப் பாசடை பொலிந்த
கற்பக நிழற்கட் காவலன் போலப்
பாண்டிய சோழ மாண்டகு நாடுக
ளாண்டருள் செய்யு மாறெம் மனத்தகத்
தாசைமீக் கூர்ந்துநல் லாசிடை யிடுது
மெங்கோ மானே யினிமையாய்ச்
செங்கோல் செலுத்திச் சிறந்துவாழ் கெனவே! (உசுங)

[மலர்மாரிபெய்து யாவரும் போகின்றனர்.

ஏழாம் அங்கம் முற்றிற்று.



## வாழ்த்து.

கலிவிருத்தம்.

'வாழ்கசி தாநந்தப் பரிதி மாலுடன்
வாழ்கக லாவதி வளர்க வில்லறம்
வீழ்கமா மழைமிக விளைக நாணிலந்
தாழ்கமற் றருந்துயர் தழைக பத்தியே. (உ௬௪)

இயலிசை நாடக மென்னும் பேரவா
முயரெழில் பரந்தசீ ருறுப்பு மேவிய
நயனுறு நற்றமிழ் நங்கை வாழிய
வியனரும் புலவர்மேன் மேலு முய்கவே. (உ௬௫)

வீடரும் பொதுசந விசயை மண்டபீ
வாடரங் காகிய வதற்கு நம்மவை
நாடிவந் தாடிய நடர்க்குங் காணிய
கூடிய மாந்தர்க்குங் குறைவில் சோபனம். (உ௬௬)

கலாவதிநாடகம் முற்றிற்று.



திருச்சிற்றம்பலம்.



# குறிப்புரை.

## பாயிரம்.

---

பக்கம். க:—பா-க. உறத்தித்திக்குஞ் சரசமொழிச் செய்யாள்=மிகவும் இனிய சுவையோடு கூடிய சொற்களையுடைய செவ்வியினள். சித்திக் குஞ்சரசரணம்=சித்தி விநாயகர்தாள்.

„ „ பா-உ. முருகபிரானுந் தேவசேனை யம்மையும் பந்தாடும் அவசரத்திற் பந்து அம்மையார் மடியில் தாவிற்றாக, அதனைத் தருதியென்னும் வியாஜத்தினா லவர்தங் குங்குமந்திமிர்ந்த கொங்கைத்துணையினை நீவு மவ்வன்புடை யண்ணலை யிடைவிடாது சிந்திப்பாம்.

„ „ பா-ங. தனது இதழினில் வள்ளியம்மையால் நிகழ்ந்த பற்குறிகளைப் பல்வித வுபாயங்களினாலும் நீக்கமுயன்றும், அவை நீங்காமை கண்டு அவற்றை மறைப்பான் தனது அதரத்தினைக் கொவ்வைக்கனியென மருண்டு இக்கிள்ளையே யத்தீங்கிழைத்த தென்று கூறக்கருதிக் கையினிற் கிளியொன்றினைப் பிடித்துக்கொடு தேவசேனைமுன் போந்தானது கீர்த்தியைப் பாடுவாம்.

பக்கம். உ:—பா-ச. வெண்மையைப் பங்கயத்தொடுங்கூட்டுக.

„ „ பா-ரு. நடராஜப்பெருமான்றன் நான்கு திருக்கரங்களினுந் தற்குறிப் பேற்றியது.

„ „ பா-சா. இன்னுஞ் சிறைகள் முளைக்கப்பெறாதவோ ரிளம்பறவை பறக்க முயல்வதனை யொக்கும்.

„ „ பா-எ. மாதுறக்கம்=பெரிய சுவர்க்கம்.

## முன்னுரை.

பக்கம். ரு:—பா-அ. மலர்மணம்போ லெங்கு முறுபவன் = மலருமணமும் அத்துவிதமாநிற்றல்போல யாண்டும் வியாபித்தவ னென்றும், மலர் அரும்பும் போதுமாகுங் காலத்து மணம் வெளிப்படாத வாறுபோற் பெத்த தசையில் ஆன்மாக்களுக்கு வெளிப்படாதுடனிருந்தும், மலராங் காலத்து மணம் வெளிப்படுதல்போல முத்தி தசையில் ஆன்மாக்களுக்கு வெளிப்பட்டு நின்றும் எவ்விடத்தும் உறைபவனென்றும், பொருள் கொள்க. மாவின்ப.........ஒரு கோவை: பேரின்பத்தையே சாகரமாகவும் முத்தியையே அதனாற் சூழப்பட்ட வுலகாகவும், கடவுளையே ஏக சக்கிராதிபத்தியஞ் செய்யும் அரசனாகவும் உருவகஞ் செய்திருத்தல் காண்க.

பக்கம். கூ:—பா-கo. களிசிறக்குங் காறு= களிகூரும்வரையும். உம்மை விகாரத்தாற் றொக்கது. வேற்றுப்பொருள்வைப்பணி.

,, ,, வரி-கக. உo. கவி, கமகன், வாதி, வாக்கி: இவர்தம்முள் வேற்றுமையை உய்த்துணர்க.

பக்கம். எ:-பா-கக. கஉ. இப்பாடல்களில் வசந்தகாலத்தை முறையே யரசனாகவும் அரசியாகவுஞ்செய்துள ஏகதேச வுருவகவணிகளைப் பூர்த்திசெய்துணர்க.

,, ,, பா-கா. உருவகவணி. இதன்கண் வசந்தத்தை நடனமாதாகக் குறித்திருத்தல் காண்க.

பக்கம். அ:—வரி-ரு-எ. இவ்வுருவகத்தை யுற்று நோக்குக.



# அங்கம்—க.

## முதற்களம்.

பக்கம். கூ:—பா-கஎ. கணத்திற் கெல்லா முதல்வ = கணபதி யே.

பக்கம். கஉ:—வரி-உக. தாங்கள் தாம் எனக்குத் தெய்வம்: வேசையர் வீடுசெல்வாரியல்பாய சொற்க ளுள் இதுவும் ஒன்றுபோலும்.

„ „ வரி-உஎ. அகோபலர் : அரண்மனை வைத்தியர்.

பக்கம். கச:—பா-கஅ. போனம் : மகரக்குறுக்கம்.

„ „ வரி-அ. சமானிய - சாமானிய.

„ „ வரி-கரு-கசு. வாய் புளித்ததோ மாங்காய் புளி த்ததோ என்று பேசுதல் = ஒட்டாமற் பேசுதல். இஃது இப்பொருண்மைத்தா தலை வல்லார்வாய்க் கேட்டுணர்க.

## இரண்டாங்களம்.

பக்கம். உஉ:—வரி-கச. கோலின் செம்மை = அரசாட்சியின் நேர்மை.

„ „ வரி-உச. அடிகள்; பெரியோரைக் குறிப்பதோர் உயர்வு கருதிய சொல். ஈண்டுத் தந்தை யைக் குறித்தது. "அடிகள் முன்னர் யா னடிவீழ்ந்தேன்" சிலப்பதிகாரம்.

பக்கம். உங:—பா-ருO. ஊறுகின்ற புனல்நிறைந்த கிணற்றி னுள்வாழு மீன்போன்றார் பிற நாடுகளின் காட்சியாற் போதருமின்ப மிழந்தவராயி னார். "கிணற்றுத் தவளைக்கு நாட்டுவளப் பமேன்" என்பதனையு நோக்குக.

பக்கம். உச:—பா-ருஉ. இனிய கரும்பி னுதித்துந் திரண்ட தாளுடைத்தாயுங் குதிரையின் பிடர்மயிர்

போல விரிந்து விளங்கியுங் கொழுந்தா டை யினிய நறுநாற்ற மில்லாததாதல் போல், மேன்மேலு மோங்கி வளருநற் குடிப் பிறந்துவைத்தும் ஒருவனறன் சீர்த்தியினைச் செய்யுட்களினும் சிலைகளினுந் தீட்டற்குக் கருவியாய மிக்க ஆண்டன்மை யில்லானுயின் அவன்றன் உயர்குடிப் பிறப்பினுற் போந்தபயன் யாதுகொல்?

பக்கம். உரு:—வரி-௪. சுந்தரேச பாதசேகர பாண்டியன், வங்கிய சேகரபாண்டியன் முதலாயினுர் காலங்கள்.

---

# அங்கம்—௨.

---

## முதற்களம்.

பக்கம். உக:—பா-௩௪. சிலாதரன் = சிவபிரான்; மலையை (வில்லாகத்) தரித்தவன். நலாதவ குலங் கவின்ற=நல்ல சூரியகுலத்திற் கழகுசெய்யும்.

பக்கம். ௩௫:—பா-௩௫. கைப்பிடித்துக் கொள்ளல்=மணந்து கொள்ளல். "முடவனுக்குக் கொம்புத்தேன்கிட்டுமோ?" என்ற பழமொழியையுங் காண்க.

## இரண்டாங்களம்.

பக்கம். ௩௬:—வரி-அ. கொம்புகளிற் சுகம் = மரக்கிளைகளிலுள்ள கிளிகள்; கொம்புகள்+இல்+சுகம்= இல்லுறை மகளிரின்பம்.

„ „ பா-௩௬. விழையா: விழையாமல்; விழைந்து. மறன்=வீரம்; கொலை. ஏமமன்று = இன்

பத்தைத்தரும் ஆடரங்கு; இன்பமல்லா மல். இப்பொருட்கு 'அன்றி' யென்பது 'அன்று' என "அன்றி யின்றியென்" என் னு. நன்னூற் சூத்திரத்துள் உடம்பொடு புணர்த்தலாற் றிரிந்ததென்க. பூதரம்= மலை. பழிச்சல்= துதித்தல்; பழித்தல். மன்மதன் = காமன்; நிலைபெற்ற மதம். தவறரு மின்பம்=தவறாத வின்பம் ; தவ ல் + தரும்+இன்பம்=கேடுபயக்கு மின் பம். சாந்தமொழியும் = சாந்தமாப்பே சும்; சாந்தநீங்கிய. உத்தமச்செல்வர் = உயர்ந்த செல்வர்; உவ்விடத்தேயுள்ள தமோகுணச்செல்வர்.

**பக்கம். ௩அ:—**வரி-கச. சகுனி சுயோதனற் குதவிபுரிந் தாங்கு புரிதல்=அடுத்துக் கெடுத்தல்.

**பக்கம். ௩கூ:—**பா-௩அ. காவலன், கல்வி, சூரியன் என்ற மூன்றுகண்ணினுள் முதலிலுள்ள கண்ணாகிய காவலனில்லையேல் மக்களுக்கு இடரெனு மிருணீத்த லரிது.

பக்கம். ச0: — பா - ௩கூ. முறைநிரனிறையாப் பொருள்கொள்க.

## மூன்றாங்களம்.

**பக்கம். சந:—**பா-சக. வரி - க - ச. மயக்கவணி.

வரி - ரு - அ. செண்டுவெளி=குதிரைகள் சுழன்று செல்லுமாறியற்றிய வையாளிவீதி. புறநானூற்றில் களச, உஉ0-ஆம் பாட்டுக்களினுரையின்கண், முற்றம் மன்றம் என்ற வீரிடங்களினுஞ் செண்டு வெளியென் றுரையெழுதப்பட் டிருத்தலான் அது வெளியென்பதும், பெரிய

புராணத்துக் குதிரைச்செண்டென்று கூறியதற்கேற்ப "வாளுளைப், புரவியிற் பொருவில்செண் டாடிப் போர்க்கலை, தெரிதலின்" எனக் கம்பராமாயணத் திலுங் கூறப்பட்டிருத்தலான் அவ்வெளி, செண்டுவெளி யென்பதும் வெளியாயின. "நீதில்வை யாளி வீதி நிகழ்செண்டு வெளியே யென்ப, சாதியாம் புரவி வட்டந் திருமுற்றந் தானு மப்பேர்" என்று சூடாமணிநிகண்டு மிக்கூற்றினை வலியுறுத்துமாறறிக. அன்றியும், "பருமநின்றுகு மணிபரல் சொரிவதாப் பகட்டி,னருவி மும்மதம் விலாழிநீ ராவடி மிதித்த,லுருவ வன்மர மிடிப்பதா நிலம்வலி யுறுப்பார்,விரவி நின்றவச் சூழலொத் துளசெண்டு வெளிகள்" எனத் தணிகைப்புராண முடையார் கூறுதலையு முற்று நோக்குக. அற்றேற் செண்டு வெளியை வையாளி வெளியென்னாது, வையாளி வீதியென்றதென்னையெனின், ஔபசாரிக நியாயம்பற்றி யவ்வாறறைந்ததென்க. செண்டு வெளிகளிற் குதிரை யேறிச் செல்வோர் தங்கள் முதுகுகளைத் தாங்களே பார்க்கலாம்படியாகக் குதிரைகள் விரைந்து செல்கின்றன என்பதாம்.

வரி-க0-கக. மும்முரசம்= மங்கலமுரசம், வெற்றிமுரசம், கொடைமுரசம்.

வரி-கக. காஞ்சி=எண்கோவை யுள்ள மாதரிடையணி.

பக்கம். சரு:—பா-௬. சவலைவெண்பா.

பக்கம். சசு:—பா-சசு. இதன்கட் சோலையில் நடநசபை யொன்று உவம வுருவகவணிகள் கொண் டு காட்டியிருத்தல்காண்க. மலிபுது மண மகள் பொலிவினைமானும் நந்தநவநம் = பலவாபரணங்கள் நிறைந்த புதுமணப் பெண்ணினது அழகினை யொக்கும் பூஞ் சோலை. "பொழிலின் மிக்கதனிற் புக் கான் மணமகளிர்போற் பொலிந்ததே" எனச் **சிந்தாமணியினும்**, "ஒண்ணுதன் மகளி ரழகொடு மறுகும், விண்ணுயர்ந் தோங்கிய கடற்றவும்" எனப் **பதிற்றுப் பத்தினுங்** கூறியிருத்தல் காண்க.

பக்கம். சகூ:—பா-ருo. தாமரையை முகத்திற்கும், வெண்ப ளிங்கை வெள்விழிக்கும், செவ்வரத்த விரேகையைச் செவ்வரிக்கும், ஒப்பிட் டிருத்த லுணர்க.

பக்கம். ருக:—பா-ருச. கிள்ளைவிடுதூது.

" " பா-ருரு. அன்னவிடு தூது. இதனைப் 'பிரமா ணிகை' விருத்தமென்பர் வடநூலார்.

" " பா-ருசு. குயில்விடுதூது. இதனைத் 'தோடக' விருத்தமென்பர் வடநூலார்.

பக்கம். ருஉ:—பா-ருஎ. மேகவிடுதூது. இதனைத் 'தூணகம்' என்பர் வடநூலார்.

" " பா-ருஅ. யமகம். காதம்பமாலை=கதம்பமாலை. காதம்+பத்து=பத்துக்காவதம். காதம் பம்=இனிதாகப்பாடும் அன்னம். காது+ அம்பு+அங்கு+உறு = கொல்கணை பொ ருந்திய. அங்கு - அசை. இதுவும் அன்ன விடுதூது.

பக்கம். ௫௩:—பா-௫௬. இதனை 'உருக்குமவதி' யென்பர் வடநூலார்.

பக்கம். ௫௫:—பா-௬0. நாசியினிடத்து நான்றுள வணியினது முத்து முறுவ லொளியு மிதழொளியும் பெற்று மாதுளம்பழ விதையினை யொத்திருத்தல் காண்க.

பக்கம். ௫௬:—பா-௬௧. வைரமணிபதித்துக் குயிற்றிய சுட்டி யென்னும் அணியினையணிந்து விளங்கும் முகம் (இராகுக்கோள் தன்னைப் பற்றவருவதுகண்ட) நட்சத்திர கணங்களால் வளைந்துகொள்ளப்பட்ட மதியினையொக்கும்.

,, ,, பா-௬௨. பஃறொடைவெண்பா. விழிகளை முன்னிலையாக்கிக் கூறியது. கற்பனையையுய்த்துணர்க.

பக்கம். ௫௭:—பா-௬௩. இதனைச் 'சம்பகமாலை' யென்பர் வடநூலார்.

,, ,, பா-௬௯. சவலை வெண்பா. புனைவிலி புகழ்ச்சியணி. கூட மின்று=மறைவின்றி. எண்ணமது: 'அது' பகுதிப்பொருள் விகுதி.

பக்கம். ௫௮:—பா-௬௬. ஒரு விகற்ப வின்னிசை வெண்பா.

பக்கம். ௬0:—பா-எ௨. அரசர்கொம்பு = ராஜபுத்திரி. 'அர்' போலியெனக் கொள்ளின் அரசங்கொம்பெனத் தொனித்தலுங் காண்க.

பக்கம். ௬௧:—பா-எ௩. மடவார் தொழுமாமதியே: "பிறை தொழுகென்றல்" என்ற அகப்பொருட்டுறை யுண்மையு முணர்க.

பக்கம். ௬௨:—பா-எ௬. பிறிதாராய்ச்சியணி.

பக்கம். ௬௩:—பா-எ௮. செவ்வணியணிந்து பரத்தையர் சேரி புக்க சேடிபோல முடிமிசைச் செந்தளி

ரீன்று மற்றை மரங்களினிடை நிற்கு மிவ் வசோகு தனதடிமிசையுந் தளிர்த்தது. இஃதென்னை யதிசயம்! என்பதாம். 'செவ்வணியணிந்து சேடியைவிடுத்தல்': அகப்பொருட்டுறை.

" " பா-எகூ. சூற்கொண்ட விவ்வசோகுதளிர்த்துப் பூக்குமாறு (தோகதஞ்செய்ய) உதைத்த கலாவதியினது அடியின்க ணூட்டப்பட்ட செம்பஞ்சுக் குழம்பினு னியன்ற சுவ டென்க.

" " பா-அ0. தற்குறிப்பணி. இதற்கு எதிர்நிலையணி யுறுப்பு. கற்பனையினையுஞ் சொற்பொரு ணயத்தினையு முய்த்துணர்க.

# அங்கம்—ரு.

## முதற்களம்.

பக்கம். சுஎ:—வரி-க0. பட்டிமண்டபம்: கலை பயில் கழகம். "பன்னருங் கலைதெரி பட்டி மண்டபம்" எனக் கம்பராமாயணத்தும், "பட்டிம ண்டபமேற்றினையேற்றினை" யெனத்திரு வாசகத்தும்,"ஒட்டியசமயத்துறுபொரு ள் வாதிகள்,பட்டிமண் டபத்துப் பாங்கறி ந் தேறுமின்" என மணிமேகலையினுங் காண்க.

பக்கம். சுகூ:—பா-அஉ. வனத்தகு=அழகுபொருந்திய. முனை த்தகை=முன்னிருந்த தன்மை.

## இரண்டாங்களம்.

பக்கம். எரு:—பா-அகூ. கனை=மகோமோகினி. இஃதொரேர் வோரடி மிக்கு வந்த கொச்சகவொரு போகு.

பக்கம். எ௬—பா-௬௦. இதனை 'மணிமாலம்' என்மர்வடநூலார்.

பக்கம். எஅ—பா-௬௧. முதற்பொருளுக்கு 'மநோமோகினி'யை யெழுவாயாக்கிச் 'சொல்லுகிற்பா' ளைப் பயனிலையாக்கிப் 'பாவையை' விளியாக்குக. இரண்டாம் பொருளுக்கு 'மநோமோகினி' யை விளியாக்கிப் 'பாவை' யை யெழுவாயாக்கிச் 'சொல்லுகிற்பா' ளைப் பயனிலையாக்குக.

## மூன்றாங்களம்.

பக்கம். அ௧:—பா-௬௪. சீர் = ஈண்டுஉவமவுருபு. இலக்கண விளக்க முடையார் தமது அணியியல் உ௫-ஆம் சூத்திரத்து 'இன்னனபிறவும்' என்றதன்க ணடக்கிக்கொள்ளுமாறு கூறி யிச் செய்யுளையே யதற்குதாரணமாகவுங் காட்டுதல் காண்க.

பக்கம். அஉ:—பா-௬௫, ௬௬, ௬எ. சந்திரோபாலம்பநம்.

" " பா-௬௫. பிரிநிலை நவிற்சியணி. இதனை 'நிருத்தி' யணியென்பர் வடநூலார். அம்புலி= நீர் உடையவன்.

" " பா-௬௬. கலைமதி=கலைகளையுடைய சந்திரன்; கலைந்தமதியை யுடையவன்; வினைத்தொகை நிலைக்களத்துப்பிறந்த அன்மொழித் தொகை. பிரிநிலை நவிற்சியணி.

" " பா-௬எ. ஆதியிற் றமிழ்ப்புலவர் மாதரார் முகத்திற்கு, சந்திரனே! நின்னையும், தாமரையையும் உவமைகூறிப் போந்தபின்னர், நின்பாற் குறைநிகழக்கண்டு அன்னார்நின்னை உவமை கூறுதலொழிந்து தாமரையையே உவமைகூறினாராக, அதுகண்டு

பொறுமை மேற்கொண்டு நீ ஒருபாவமு மறியாததாமரையை வாட்டுவான்புக்கனை யிஃதென்கொலோ? நீ யடைந்தகலைகள் என்னுயின? நீ பெரியோரை யடுத்தத ஞற் போந்தபயன் யாதுகொல்? என்ப தாம். — ஈண்டுப் பெரியோரை யடுத்தல் சிவபெருமான் முடிக்கட் டங்குதலாம். தற்குறிப்பணி.

பக்கம். அரு:—பா-கூஅ, கூகூ. சந்திரோபாலம்பநம்.

" " பா-கூஅ. ஐய! சோம! நீவிடப்பயலாந் தன்மை யையும் வஞ்சகனுந் தன்மையையும் அறிந் தேன். நீ சூரியன்பால் *ஒளிபெற்று அவ ன்றன் அன்புடைய காதலியாகிய பரிசுத் தமான பதுமினியை (தாமரையாகிய மக ளிரை) நின்றன் கிரணக்கையாற் பற்றி யிழுத்தனை, அவள் நின்கைகளைப் புறத்தே தள்ளி இதழ்க்கதவம் மூடிக்கொண்ட னள், அதுகண்ட கன்னிப்பெண்கள் நின் னை வணங்குதலொழிந்து இகழவுந் தலைப் பட்டனர், நீ பழியுமெய்தினை ஆதலால் தியநீயென் முன்னர் நில்லாதொழிக என் பதாம். தற்குறிப்பணி. கற்பனைக்கேற்பக் கன்னிப்பெண்கள் பிறைதொழும் வழக்க மிக்காலத் தொழிந்தமையு முணர்க.

" " பா-கூகூ. தற்குறிப்பணி. இதற்கு எதிர்நிலையணி யுறுப்பு. மித்திரன்=சூரியன்.

" " பா-க00. எதிர்நிலையணி. இதற்குருவக முறுப் பாம். கருத்தடையணி.

# அங்கம்—ச.

## முதற்களம்.

பக்கம். அகூ:—பா-க0உ. இது நடுவெழுத்தலங்காரம். நடுவெழுத்துக்களெல்லாம் பாடலிலே தடித்தவெழுத்துக்களாகக் குறிக்கப்பட் டிருக்கின்றன. மகதி : நாரதன்கையாழ், கலாபி=மயில், சொன்னவினையிற்றி ஞப்பனுற்ருள்=கலாவதி.

பக்கம். கூ0:—பா-க0௩. இதனை 'மாலினி' விருத்தமென்பர் வடநூலார். எதிர்நிலையணி. பாண்=தேன்.

" " பா-க0ச. இஃதொரு பொருண்மேல் மூன்றடுக்கிவந்த ஆசிரியத்தாழிசை.

" " பா-க0ரு. உருவகவணி.

பக்கம். கூக:—பா-க0எ. இதனை 'ஆரியை' விருத்தமென்பர் வடநூலார்.

பக்கம். கூஉ:—பா-க0அ. வண்டுவிடுதூது. இதனைச் 'சந்திரிகை' யென்பர் வடநூலார். வண்டுகாள்! கள்ளைக்குடித்துத் திரியாது என்றலைவன் பாற்சென்று "நின்றலைவியைக்காத்தி" யென்றுரைத்து அவனை யழைத்து வம்மின் என்பதாம்.

பக்கம். கூ௩:—பா-க0கூ. இதனைப் 'பஞ்சசாமரம்' என்பர் வடநூலார்.

பக்கம். கூச:—பா-ககக. இதனை 'வைதாளியை' என்பர் வடநூலார்.

" " பா-ககஉ. உருவகவணி.

பக்கம். கூ௫:—பா-கக௩. இதனைச் 'சேணி' என்பர் வடநூலார்.
,, ,, பா-கக௪. இது கிரோட்டகம்.

பக்கம். கூ௬:—பா-கக௬. இதனைப் 'புஜங்கப்பிரயாதம்' என்பர் வடநூலார்.
,, ,, பா-ககஎ. இதனை 'மணிமாலை' யென்மர் வடநூலார். இப்பெயரு மிப்பாட்டி விருத்தல் காண்க.
,, ,, பா-கக௮. இதனைச் 'சலோத்ததகதி' என்பர் வடநூலார்.

பக்கம். கூஎ:—பா-ககக௯. புன்னகையி னிலக்கண மிதன்கட் காண்க. "கண்ணிணை யிடுகல் செல்லா கவுட்டுணை சுரித்தல் செல்லர, வண்ணவெண் பற்க டோற்ரு வறிதன்றி நகைமி காது"—விநாயகபுராணம். புண்ணியப் பொருள்க ளாவன அட்டமங்கலமுமாம்.
,, ,, பா-க௨0. முன்னடியில் 'நோய்' என்றதற்கேற்பப் பின்னடியில் அமுதம் 'மருந்து' எனப் பட்டது.
,, ,, பா-க௨க. காதலை மலராக்கூறி யிருத்தல்காண்க.

பக்கம். கூ௮:—பா-க௨௪. இது நான்காரைச் சக்கிரபந்தம். இதனை யுபதேசமுறையாற் சித்திரத்தில் வரைந்து அதன் குறட்டிற் 'கலாவதி' யென்று போதருதல்காண்க. 'எய்யும்' என்றபாலது 'எய்ம்' என்ருயது "செய் யுமெ னெச்சவீற்றுயிர்மெய்" என்ற நன் னூற்சூத்திரவிதியா னென்க.
,, ,, பா-க௨௫. தாதுணம் புறவென=சிறுபருக்கைக் கற்களை யுணவெனக்கொள்ளும் அழகிய புறுவைப்போல. பேதுறூஉம்=பேதுறுக் கும்! வருத்தும்.

பக்கம். ௯௯:—பா-௧௨௬. இதனை 'வித்துயுந்மாலை' யென்மர் வட நூலார்.

" " பா-௧௨௮. இதனை "அசுவதாடி" விருத்தமென் மர் வடநூலார்.

பக்கம். ௧0௧:—பா-௧௩0. இதனை "வசந்ததிலகம்" என்மர் வட நூலார்.

" " பா-௧௩௧. உலகத்தையே யொருசோலையாகவும், சோணாட்டையே யொரு மாமரமாகவும், கலாவதியையே யதன்கணுள்ள வொரு குயிற் பேடாகவும் கூறியிருத்தல்காண்க.

" " பா-௧௩௨. இது மந்மதோபாலம்பநம். இதன்க ணுள்ள சொற்பொருணயங்களை யுய்த்து ணர்க.

பக்கம். ௧0௨:—பா-௧௩௩. இதுவும் மந்மதோபாலம்பநம். கட் டளைக்கலிப்பா. மன்மதனே! நினது கணை களு ளெல்லாம் மிகவும் கொடிதாகிய 'நீலம், கலாவதியின் கண்ணிற்கு இணையா காது தோற்று எதிர்நிற்கவுமஞ்சிப் பகற் போழ்து வெளிப்படாது இரவிற் றலைகா ட்டிப் பன்னெடுநாளொழுகியு மமையாது அக்கண்களை வெல்லுமாறு காட்டினிற் றவஞ்செய்யவுன்னி அக்கண்களாற் காண் டலரிய அவளது கூந்தற்காடே தக்கதெ ன்று கருதி அதன்கண்ணேயே தவம்புரி ந்து வருந்துகிற்பதைக் காண்பாயாக என் பதாம். கலாவதி அப்போது நீலஞ்சூடிக் கொண்டிருந்தன ளாதலி னிவ்வாறு கற் பனை செய்யப்பட்டது.

" " பா-௧௩௬. உருவகவணி.

,, ,, பா-௧௩௭. அன்புடன் போந்து என்றொடைமீ திருந்தன ளேனும் அவளை யானிமைத்து நோக்குவேனேல் அவள் வேற்று மாதர் போலுகின்றாள்; இமையாது அவள் முக மே நோக்குவேனேல் அவள் நாணமுறு கின்றாள்! அம்மவோ! யான் இதற்கென் செய்வது? என்பதாம்.

பக்கம். ௧0௪:—பா-௧௩௮. இதனை 'மத்தகோகிலம்' என்மர் வடநூலார். இப்பெய ரிதன் கண்ணும் வருதல்காண்க. வேர்வை யரும்பியமுகம் முத்தின்ற மதியினை யொக்கும். மதியினி டத்து முத்துப் பிறக்கு மென்பதைத் "தந்தி வராக மருப்பிப்பி பூகந் தழைகத லி, நந்து சலஞ்சல மீன்றலை கொக்கு நளி னமின்னார்,கந்தரஞ் சாலி கழைகன்ன லா வின்பல் கட்செவிகா, ரிந்து வுடும்பு கரா முத்த மீனு மிருபதுமே" என்ற இரத்தின ச்சுருக்கச் செய்யுளானு முணர்க. திட்டி வாயில்=கண்ணாகியவாயில்; கரந்துசெல் லுஞ் சிறுவழி.

பக்கம். ௧0௫:—பா-௧௩௯. இதனாற் கலாவதி யற்றைஞான்று மருவுஞ் சூடிக்கொண் டிருந்தாளெனல் பெறப்படும்.

பக்கம். ௧0௬:—பா-௧௪௧. இதனை 'மாலினி' யென்மர் வடநூ லார்.

பக்கம். ௧0௭:—பா-௧௪௨. இதனைத் 'தோதகம்' என்பர் வட நூலார்.

,, ,, பா-௧௪௩. இதனைப் 'பிரகிருதிச்சந்தம்' என்பர் வடநூலார்.

பக்கம். க0அ:—பா-கசச. இதனைச் 'சம்மதம்' என்பர் வடநூலார். இப்பெய ரிதன்கண்ணும் வருதல் காண்க.

பக்கம். க0க:—பா-கசரு. 'போது' மலராயின் 'ஆகின்ற' என்பதனைப் 'பொன்' னொடுங்கூட்டுக; காலமாயின் நேரே கூட்டிக்கொள்க. மாகட்டம்=மகாகஷ்டம்=மிக்கதுன்பம்.

பக்கம். ககக:—பா-கசஎ. இதனை 'வஙமயூரம்' என்மர் வடநூலார். இப்பெய ரிதன்கண்ணும் வருதல் காண்க. காண்டகு = அழகுபொருந்திய. 'காண் = அழகு' என்பர் அடியார்க்கு நல்லாரும்.

## இரண்டாங்களம்.

பக்கம். ககஎ:—பா-கசஅ. இதனை 'சங்கிருதிச்சந்தம்' என்பர் வடநூலார்.

## மூன்றாங்களம்.

பக்கம். ககசு:—பா-கசகூ. கட்ட: மணந்து கொள்ள. வச்சான் = வைத்தான். தோசமிண்டே= தோஷமென்றே.

" " பா-கரு0. "நுங்குநுன் றிட்டன்ன கண்ணீர் மைகண்டொழுகுவேன்" என்றார் நாலடியாரினும். காண்டு=கா என்று. களுதை =கழுதை. வேண்ட: வேண்டின.பாடிக் கிட்டு=பாடிக்கொண்டு. நாண்டி=நாணி.

" " பா-கருக. ஏச்சுக்கிட்டு = ஏய்த்துக்கொண்டு. இன்னிக்கேக்க=இனிக்கேட்க.

இம்மூன்றுங் கொடுந்தமிழ்ப்பாக்களாம்.

பக்கம், கஉ0:—பா-கருஉ. போகும் பொறியார் புரிவும் பய மின்றே: நுண்ணிய விடயங்களினும் நுழைந்து செல்லும் அறிவுடையோர் அவரொடு முரணிச்செய்யுஞ் செயலும் பயனின்றாய்விடும் என்க. இனிப் போகூழாளர்செயலும் பயனின்றாமென்பாருமுளர்.

பக்கம், கஙசு:—பா-கசுக. ஒருமாவிற்பெருமான்=ஏகாம்பரேசன். கங்கையைச் சிரத்தினும் உமையைப் புரத்தினுங் கொண்டமையின் "இருமானைத் தலையுடலினிருத்திய" தென்றாம்.

# அங்கம்—ரு:

## முதற்களம்.

பக்கம், கஙஎ:—பா-கசுஉ. இதனை 'மணிரங்க' மென்மர்வடநூலார். இப்பெய ரிதன்கண்ணும் வருதல் காண்க. ஏடுதுற்றவயில்=பகைவருடலம் பொருந்திய வேலென்றுதல், பகைவருடலங்களைக் கொன்றுகுவித்த வேலென்றுதலுரைக்க. ஏடு=உடல். உயிர்கள் பிறவிதோறுமெடுத்தலின் ஏடென்றது. **நாலாயிரப்பிரபந்த** வியாக்கியாதாவு மிவ்வாறேகூறுதல்காண்க. "எடுதுற்ற வடிவேலான்" என்றார் **கம்பரும்**. மணிரங்கம்=இரத்தினசபை. கூடுதீங்கெனை = அடையக் கடவதாயதீங்கு யாதுகொல்?

பக்கம், கஙஅ:—பா-கசுங. இதனை 'இந்துவதனை' யென்பர் வடநூலார். இப்பெயரிதன்கண்ணும் வருதல் காண்க.

" " பா-க௬௪. இதனை 'நவநந்திநி' யென்பர் வடநூலார். இதன்கண்ணே யிறுதி யெதுகையு மொன்றிவரல் காண்க.

பக்கம். க௬௯:—பா-க௬௫. மணிவாசகர் பாசுரம்: திருவாசகம்.

பக்கம். க௭0:—பா-க௬௬. அறிந்தும்=அறிந்தோம். செந்நிலத்தின்கட் பெய்தநீர் தானுஞ் செம்மையெய்தி யிரண்டுமொன் றுதல்போல நம்மிருவர் நெஞ்சமுங் கலந்தனவென்க. "புலத்தலிற் புத்தேணா டுண்டோ நிலத்தொடு, நீரியைந் தன்ன ரகத்து."—திருக்குறள்.

" " பா-க௬௭. இதன்கண்ணே யன்னப்பறவையின் பெயர்களிற்பல பிரிநிலை நவிற்சியணி பற்றிக் கூறியிருத்தல் காண்க. பெற்றும்=பெற்றோம். வனம்=சலம்; காடு. பதுமாதநம்=தாமரையாகிய இருப்பிடம்; யோகஞ் செய்தற்குரிய வெண்வகையாதனங்களுளொன்று.

பக்கம். க௭உ:—பா-க௬௮. கோட்டை காவலாளர் கள்வரால் வருங்குற்றத்தை நீக்கக்கருதி அவரைக் காணுதபோதும் கண்டேம் கண்டேமென்று கூறுதல்போல, நீவிலகிநின்று யான் செய்யாதனவற்றைச் செய்தேனென்று சொல்லிக் கோபியாதே. யான் நின் ஆணைவழி யொழுகலன்றி யதனைக் கடக்கவும் வல்லேனோ? என்பதாம்.

" " பா-க௬௯. இதனை 'மாலினி' யென்மர் வடநூலார். இப்பெயரிதன் கண்ணும் வருதல் காண்க.

பக்கம். க௭௩:—பா-க௭0. இடையளவுந் தாழ்ந்த தனபாரங்களையுடைய பேரிளம்பெண் முயக்கத்தி

னும் மடந்தைப் பருவத்து மாதரார்தா ளுதை சிறப்புடைத்தாமாறுபோற் சொற் பொருள் உணரமாட்டாத அரசிகரோடு ஆனந்தப் படுவதினுஞ் சொற்பொருளு ணரவல்ல இரசிகரோடு செய்யும் போர் மிகவும் நன்றென்க.

பக்கம். கசச:—பா-கஎக. பாவைமார் அன்புற்றால் ஒரு பயனு மில்லாதிருப்பவும் வருத்தமுற்றார்போல மூர்ச்சை கொள்வார்கள் என்பதாம்.

„ „ பா-கஎஉ. இதனை 'மத்தமயூரம்' என்மர் வட நூலார். இப்பெயரிதன் கண்ணும் வரு தல் காண்க.

„ „ பா-கஎங. நிலாமணிச் சிலாதலம் = சந்திரகாந் தக் கற்களாலியன்றவிடம்.

## இரண்டாங்களம்.

பக்கம். கசரு:—வரி-உ௯. த்வம் சிதாநந்தமயோஸி = நீ சிதா நந்தமயனாகிறாய். இவ்வாறு மநோமோ கினி கூறியது அவன் பெயர் தெரிந்தன்று. மற்று, அவள் 'சச்சிதாநந்தம்' என்னுஞ் சொற்றொடரைச் 'சத்' 'சித்' 'ஆனந்தம்' என மூன்றுசொற்களாய்ப் பகுத்துக்கொ ண்டு ஒவ்வொன்றாகவும் இவ்விரண்டாக வும் எடுத்து உறழ்ந்து 'மயோஸி' என்ப தனோடுசேர்த்து 'த்வம்' என்பதனை முன் னேபெய் துரைத்தனள். அது காகதாலி யமாய் அவனுக்கும் பொருந்திற்று. இனி வேதாந்தபரமாக நோக்குழி 'த்வம்' ஆன் மாவையும், ஏனையன அதனிலக்கணத் தையு முணர்த்துமாறறிக.

பக்கம், கசஎ:—பா-கஎரு. இப்பாடலினானே சத்தியப்பிரியன் 'பரமகேவலாத்வைதி' யென்பது தெள்ளிதிற்றுணியப்படும்.

பக்கம், கசஅ:—வரி-கஎ-உ0. கருத்தடையணிபற்றி யவ்வவர்கள் தத்தந்தலைவரை வெறுத்தற்கு மொறுத்தற்குந் துறத்தற்கு மறத்தற்குங் காரணங் குறிக்கப்பட் டிருத்தல் காண்க.

## மூன்றாங்களம்.

பக்கம், கரு0:—பா-கஎஎ. தகாமையணி.

பக்கம், கருக:—பா-கஎஅ. இதனைச் 'சார்த்தூல விக்கிரீடிதம்' என்பர் வடநூலார்.

பக்கம், கருரு:—பா-கஅக. ஆம்பல்=இசைக்குழல், ஊதிடு கொம்புமாம். காஞ்சி=ஒருவகைப்பண்.

## நான்காங்களம்.

பக்கம், கருச:—பா-கஅஉ. உலகவழக்கு நவிற்சியணி.

## ஐந்தாங்களம்.

பக்கம், கருசு:—பா-கஅரு. இதனை 'மதநார்த்தை' யென்மர் வடநூலார்.

,, ,, பா-கஅஎ. அரிபிரமர் அபிடேகஞ்செய்தலானும் கங்கை சிரத்தின்க ணிருத்தலானுஞ் சந்திரன் சென்னிமீதிருந்து அமுதமூற்றலானுஞ் சம்பந்தர் அப்பர் சுந்தரர் மாணிக்கவாசகர் ஆகிய நால்வரும் செந்தமிழ்த் தேவார திருவாசக மழைபொழிதலானுங் குளிர் மிகுந்தபோது, அணிதற்கு ஆடையின்றி உடனடுக்கங்கொண்ட வெம்பெருமான், அதனை நீக்குவான் கருதி, "யாமோ நரிபரியாக்கினேம் எல்லாம் வல்ல சித்தராயினேம் வைத்தியநாதப் பெயர் பெற்

றுளேம்; அன்றியும் நந்தகுமாரனே ஞான பண்டிதனெனப் பெயர் பெற்று ளான்; ஆகவே யாம் நல்ல மருந்துண்டு இவ்வுடனடுக்கத்தை யொழியாதிருப்பே மேல் நந்தம் மேன்மைபுரைபடும்" எனக் கடைப்பிடித்து நுதலினிடத்து அனற் கண்ணும் கையினிற் கனலுமெடுத்துக் கொண்டனனாயினும், அவ்வுடனடுக்க மணு வளவுந் தணியாமையானே, பித்தனென வெளியே யோடிப் பொதுவம்பலத்திற் பலர்நகைக்கக் கூத்தாடுஞ் செயலைக்கண்டு இஃதென்னேயென மனம்புழுங்கித் தன துதனபாரங்களாகிய ஒற்றண மொற்றிச் சூடுறுத்தி அவனுடனடுக்கந் தீர்த்த எமது அம்மையாகிய திரிபுரசுந்தரியே! நின்ன டித்தாமரையை யெக்காலத்துஞ் சிந்தை செய்கின்றேம். தற்குறிப்பணி. இதுபன் னிருசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பக்கம், கசுO:—பா-கஅஅ. மேதி அரக்கன்=மகிடாசுரன்.

„ „ பா-கஅகூ. வரி எ. 'உனது நாயகன் உந்தையை வென்று' என்றும், 'உனது நாயகனை உந் தைவென்று' என்றும் இருபொருள் பய க்குமா றறிக.

---

# அங்கம்—சூ.

---

## முதற்களம்.

பக்கம், கசுஉ:—பா-கக0. இறைவன்விதித்த ஆணையின் வண் ணமேயன்றி வேறெவ்வாற்றானு மெத

னையு மெத்தகையோர்க்குந் துய்த்த லரி தென்பதாம்.

## இரண்டாங்களம்.

பக்கம். கசுகூ:—பா-ககூரு. மணநிறைந்த சம்பக மரங்காள்! நுந்தம் மலர்கள் என்றனுடலினது நிறத் தினை அடைந்திருக்கின்றனவென்று நும் மைத் துதித்த எனது தலைவனுகிய சிதா நந்தன் களிகூரும்வண்ணம் நீவிர் உமது பரிசுத்தமாகிய மலர்களைத் தாரீரோ? என்பதாம். எதிர்நிலையணி.

பக்கம். கசுகூ:—வரி. உ௩-உஎ: தற்குறிப்பணி.

" " வரி. உஎ-உகூ: வேற்றுப்பொருள் வைப்பணி.

பக்கம். கஎ0:— வரி. உ-ச: தற்குறிப்பணி.

" " வரி. ச-அ: உவமையணி. இக்கருத்து ஆசிரிய வசனமாக்கொண்டது.

" " வரி. கசு - கஎ. வேங்கைபூத்தால் அது மண வினை செய்யுங்காலத்தைக் குறிக்குமென் பது தொல்லாசிரியர் துணிபு. இதனை 'வரையுநாளுணர்த்தல்' என்னு மகப்பொ ருட்டுறையானு முணர்க.

பக்கம். கஎஉ:—பா-ககூஅ. தலைவனை யிழந்த தலைவி அவனி றந்துகிடக்குங்களம்புக்குப் பைரவியாகிய பத்திரகாளியை நோக்கியிவ்வாறு கூறும் மரபினைக் **கலிங்கத்துப்பரணி**யிற் கள ம்பாடிய பகுதியிற் பதின்மூன்றாஞ் செய் யுளிற்காண்க.

" " பா-ககூகூ. 'ஏய்க்கும்' என்பதனை 'மணியாரம்' என்பதனோடு கூட்டுக. உவமையணி.

,, ,, பா-உ00. கண்ணிணை விளக்குங்கதிர்—இரவி. சூளாமணி: சிரோரத்தினம்; தேவமணியிரண்டனு ளொன்றுமாம்.

,, ,, பா-உ0க. வன்பூ—தளை. தகாமையணி.

,, ,, பா-உ0உ. இதன்கண்ணே கலாவதியினது இதயத்தை மீனாகவுஞ் சிதாநந்தனது மீசையினை அம்மீனைக் கோடற்குக் கொண்ட தூண்டிற் பொன்னாகவுஞ் சிதாநந்தனையே செம்படவனாகவு முருவகஞ் செய்திருத்தல்காண்க. மீனவன்: பாண்டியன், செம்படவன். "கண்ணின்வலைகலந்து வீசின போதுள்ள மீனிழந்தார்." — திருக்கோவையார்.

,, ,, பா-உ0ங: — சிந்தாமணி: விருப்பத்தைத்தருமிரத்தினம்; தேவமணி யிரண்டனுளொன்று. சிம்புள் : சிங்கத்தின் வைரியாய சரபமென்னு மெண்காற்பறவை.

பக்கம். களச:—பா-உ0ச. மயக்கவணி. கையிற்பிடித்து: ஐகாரக்குறுக்கம்.

,, ,, பா-உ0ரு. தற்குறிப்பணி. இதற்குமயக்கவணியுறுப்பு. பூவர்சோலை : பூஞ்சோலை ; அர்: கட்டுரைச்சுவைபடவந்ததோரசை. "பூவர்சோலைபுகுவலென்றெண்ணினான்." எனச் சிந்தாமணியிற் பதுமையா ரிலம்பகத்து கசுஙு-ஆம் செய்யுளிற் காண்க. ஆண்டுப் 'பூவர்', அர் - பகுதிப்பொருள் விகுதியென்றனர் நச்சினார்க்கினியர். இனி 'அர்' போலியென்பாரு முண்டு. சிலம்பொலியும் அன்னப்புள்ளொலியு மொக்குமாதலிற் "சிலம்பொலிப்ப வினாத்துபோ

ந்த வோதிமம்" என்னப்பட்டது. "மென் சிறையனமென மிழற்றும் பரிபுரமணிந் து" என நைடதத்தினும், "கர்விவாய்க் கருங்கணூர் காமர் பூஞ்சிலம்பு, பாவிவாய் மாளிகை யதிரக் கேட்டொறுந், தூவிவா ன் பெடைதுணை துறந்த கொல்லென, வாவிவா யிளவன மயங்கு மென்பவே." எனச் சூளாமணியினுங் கூறியிருத்தல் காண்க.

" " பா-உ௦௬. இச்செய்யுளைக் கலித்தொகை நெ ய்தற்கலி உ௬-ம் பாட்டில் "நெய்தனெறி க்கவும்......றுளாள்பவன்" என்ற பாவ டிகளுட னொப்பிடுக.

பக்கம். ௧௭௫:—பா-உ௦அ. "ஆடவர் பெண்மையை யவாவுந் தோளினாய்" என்றார் கம்பரும். உயர்வு நவிற்சியணி.

" " பா-உ௧௦. அன்புருக்கொண் மன்மதனே: இல் பொருளுவமையணி.

பக்கம். ௧௭௭:—பா-உ௧௫. இது விருச்சிகபந்தம். இதனிலக் கணத்தை யுபதேச முறையா னுணர்க. மாகச்செங்கமல மங்கை = தெய்வத்தன் வை பொருந்திய செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் மங்கையே!

" " வரி. ௧௪. தலைவன் றலைவியை யூடல் நீக்கக் கருதிவணங்குதல் இன்பநூலாராக்கேட் டுணர்க. "ஆதி பகவன் றனதூடல்" என்ற பிரபுலிங்கலீலைச் செய்யுளினு மிக்கருத் துண்மை காண்க.

பக்கம். ௧௭அ:—வரி. ௪-௬, ௧௭-௧௯. பதுமினிசாதிப்பெண்டிரி னிலக்கண மீண்டுக் காண்க.

" " பா-உகசு. சோழர் குலத்தை யொரு தடாகமாகவுங் கலாவதியை யதன்கணுள்ள மலரும் பக்குவமெய்திய தாமரைப்போதாகவுங் குறித்திருத்தல்காண்க. சக்கிரவாகம் = இரவியைக்கண்டின்புறூஉமொருவகைப்புள். தாமரையுஞ் சக்கிரவாகமும் பரிதியி னுதயம் விரும்புதலிற் கற்பனைக்கேற்பச் சிதாநந்தனைச் சூரியனெனக் கோடல் சிறப்பு.

" " பா-உகஎ. கல்வி காதலாகிய விரண்டு மலர்களைத் தன்னகத்தேந்தி நற்குணமாகிய நறுமணம்வீசுறும் முல்லைக்கொடியே! என்பதாம். வனமுல்லையினின்றும் வேறுபடுத்தற்கு 'இல் வளர் முல்லை' யெனப்பட்டது. கற்பினுக்கறிகுறி முல்லையாதல்பற்றி யிங்ஙனங்கூறிற்று. கற்புடைமங்கை தனித்து யாண்டுஞ் சேறலுடா தாதலி னிவ்வாறுரைக்கப்பட்டது.

பக்கம். கஎசு:—பா-உகஅ. "மாவுழுமலர் தாங்கி யென்னிடையொசிந்தது": வண்டு கிண்டுறு மலர்களைக் கூந்தலிற் றுங்குதலா னெனதிடை தளர்ச்சியுற்றது. இக்கருத்து 'வண்டோச்சி மருங்கணைதல்' என்னும் அகப்பொருட்டுறையினுண்மை காண்க.

" " பா-உகக. "வளியினை யுயிர்ப்பினுன் மணமுறுத்துவாய்": தனது மூச்சினுனே காற்றினிடத்து வாசனை யேற்றுகின்றவளே! முன்னர் மூன்றும் அங்கத்திறுதியில் "ஏ! கலாவதீ! நீயே யென் அறிவின் பிரகாசம்! நீ யென்பக்க லிராவிடில் யான் காணு

மொளியும் ஒளியா ?" என்று கூறியதற் கேற்ப "எளிய னிவ்விரு ளிருந்தேங்குமா வடுத், தொளிதவழ் மேனியா யொளித்த தெங்ஙனே?" என்றான் சிதாநந்தன்.

" " பா-உஉ0. "அனிச்சமு மன்னத்தின் றூவியு மாத, ரடிக்கு நெருஞ்சிற் பழம்" என்ற திருக்குறளையு மிதனுட னொப்பிடுக. மன் மத னுடைவா ளாதலின் "தாழைவாண் மலர்" என்றது.

" " பா-உஉக. 'அடிசிறிது எடுப்பினும் நின்னிடை யிறும்' என்று நின்றன் மாணிக்கப்பரல் செறிந்த சிலம்புகள் அரற்றிச் சொல்லா நிற்கும் என்பதாம். வெறி = நறுமணம். வெறிகமழ் மெய்யுடைமை பதுமினிப்பெ ண்டிரிலக்கணம். ஆடல்=விளையாட்டு.

" " பா-உஉஉ. எதிர்நிலையணி.

" " பா-உஉச. 'நாயிகா' என்னும் வடசொல் தமி ழில் நாயகி யென்று மருவிற்று.

பக்கம். க௯0: — பா-உஉரு. கோகம்=சக்கிரவாகம்.

" " பா-உஉசு. பாளை: பாளைப்பருவம். அது கரு வில் ஒரு பருவமாம். அதனைப் 'பீள்' என்பாருமுளர். ஈண்டுச் சாதலாவது நாம் ஒன்றினின்றும் நீங்குதலாம். இவ் வாறு நாடோறும் சிறிது சிறிதாக நாம் செத்துக்கொண்டிருப்பவும் அதனை யொ ருசிறிதும் பாராட்டாமலும் அதுபற்றி யிரங்கியழாமலு மிருத்த லென்னைகொல்? என்பதாம். அஃதாவது நந்தம் உடல் பாளைப்பருவம் நீங்கிப் பாலபருவ முறுத

னும் அதன்பின் பாலபருவம்நீங்கிக் காளை ப்பருவமுறுதலும் இன்னு மிவ்வண்ணமே பலபருவமுமுறுதலும் இயற்கையாமாறு போல நமது உயிரும் ஒருடலினீங்கி மற் ரேருடலுறுதலும் இயற்கையேயாகவும் அதுபற்றி யாம்அழத்தலைப்படுதல் யாவர் மாட்டும் நகை விளைக்குமே யன்றி வேறு பயன்றராதென்பது இதனாற் குறிப்பிக்கப் பட்டது.

பக்கம். கஅங:—பா-உஉஅ. இஃதொருவிகற்பக் கலிவெண்பா. இதன்கணுள்ள சொற்பொருட் செறிவு களையும் அணிநயப் பொலிவினையு முய்த் துணர்க.

பக்கம். கஅச:—பா-உங0. இதனை 'அதிகரிணி' விருத்தமென் பர் வடநூலார். உருவகவணி.



## அங்கம்—ஏ.

### முதற்களம்.

பக்கம். ககூங:—வரி. கக-கரு: புனைவிலி புகழ்ச்சியணி.

பக்கம். ககூரு:—வரி. கக-கங: மேன்மேலுயர்ச்சியணி.

பக்கம். ககூஎ:—பா-உஙகூ. 'என்பஃது': என்பது எனற்பாலது என்பஃதென விரித்தல் விகாரம் பெற் றது சந்தவின்பம்பற்றி. இப்பிரயோகம் தணிகைப்புராணத்தி லாங்காங்குக் கா ணப்படும்.

பக்கம். ககூஅ:—பா-உசக. இதனைச் 'சிரக்குவிணி' யென்பர் வடநூலார்.

,, ,, பா-உசஎ. 'வேயும் போல்வர்' எனக் காரணங் கூறுது வாளாவிடுத்தனர் மாணுக்கர் உய்த்துணர்தல் கருதி. வேயினிடத்துள்ள தேனிறால் கொள்ள விரும்பிய வேடன் அதன்கட் செறிந்துள முட்களா னுடலங் கிறுண்டு வருந்துமாறுபோல வேசையரிடத் தின்பந்துய்ப்பான் விழைந்தவிடன் அவளகத்துற்ற பல்வகை யிடையூறுகளா னுந் துன்புறுவ னென்பதாம். அதான்றியும் இடுகாட்டி னுய்ப்பதற்கு வேய்கருவியாதல்போல இவ்வேசையருங் கருவியாவரென்பது மறிக. மேலும் வேயினிடத்துப் பிணங்களே யுறுதலாற் "பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்டறையி, லேதில் பிணந்தழீஇ யற்று" என்ற திருக்குறள் ஞாபகத்து வருதல் காண்க. வெயிலேறவே யுயருமாறுபோற் கையிற்பொருளேறப் பொருட்பெண்டிருந் தாமூழுதலேகிமிர்வ ரென்பது மறிக. இனித் தாப்பிசையாக்கி 'நுகர்தற் கருமையான்' என்பதனை 'வேயும்போல்வர்' என்பதனெடுங் கூட்டியுரைப்பாருமுளர்.

,, ,, பா-உசஅ. நயந்தனர் கோடல்: முற்றெச்சம்.

பக்கம். ககக:—பா-உசநு. 'தோன்றிய' என்பதனை 'மங்கையரோடு கூட்டிக்கொள்ளாது 'காமம்' என்பதனேடுகூட்டி முடித்துக்கொள்க. ஆகாயத்திற்றேன்றிய தூமகேதுவே பூவுலகிற்குத் துன்பஞ் விளைக்குமாயின், இப்பூவுலகினிடத்தேயே யொருதூமகேது தோன்றிற்றாயின் அஃததனினு மிக்க துன்பஞ் செய்தல் வேண்டுமென்பது தானே விளங்கும்.

பக்கம். உ00:—பா-உசகூ. இடைபடச்சேய: நடுவில் வெள்ளிடையுண்டாகத் தூரியவாய பொருள்கள்.

பக்கம். உ0க:—பா-உசஎ. இதனை 'அசுவகதி' யென்பர் வடநூலார்.

„ „ பா-உசஅ. இதனை 'இந்திரவச்சிரை' யென்பர் வடநூலார்.

பக்கம். உ0உ:—பா-உருஉ. எடுத்துக் காட்டுவமையணி.

## இரண்டாங்களம்.

பக்கம். உ0ச:—பா-உருங. இதனைச் 'சுகந்தி' யென்பர் வடநூலார்.

பக்கம். உ0சு:—பா-உருச. இதன்கணடிதோறும் மூன்றுஞ்சீரும் ஆறுஞ்சீரும் எதுகையொன்றிவரல் காண்க.

## மூன்றாங்களம்.

பக்கம். உ0கூ:—பா-உருஎ. முரண்போலியணி. இதன்கண் ஒவ்வோரடியினுமுள்ள இரண்டாஞ்சீர் எதுகையொன்றுமா றறிக.

பக்கம். உகக:—பா-உருஅ. இவ்வாறு கடவுளை யரசனென முன்னுரையின் கண்ணுஞ் சூத்திரதாரன் கூற்றினுற் குறித்திருத்தல் காண்க.

பக்கம். உகஉ:—பா-உருகூ. இதனுடன் "அவனின்றியோரணுவு மசையாது" என்ற ஆப்தர் மொழியை யொப்பிடுக.

பக்கம். உகங:—வரி. அ. உலோகாயதன்: "காட்சியேயளவை யாவதென்றும், நிலநீர்தீவளியெனப் பூதம் நான்கேயென்றும், அவற்றது புணர்ச்சி விசேடத்தாற் றோன்றிப் பிரிவான் மாய்வதாய வுடம்பின்கண்ணே அறிவுமதுவின்கட்களிப்புப்போல வெளிப்பட் டழியுமெ

ன்றும், இறந்தவுயிர்பின்பிறவாதென்றும், இன்பமும் பொருளு மொருவனாற் செய்யப்படுவவென்று"ஞ் சொல்லி வீட்டினையிகழுறு மொருவித மயக்கநூ லுடையான். இதனை "எள்ளாமைவேண்டுவான்" என்ற குறட் **பரிமேலழக** ருரையினுஞ் **சிவஞானசித்தியார்** பரபக்கத்தினுங் காண்க.

பக்கம். உகரு:—பா-உசுக. உவமையணியும் ஏகதேச வுருவக வணியுஞ் சேர்ந்திருத்தலாற் சேர்வையணியாம்.

" " பா-உசுஉ. இதன்கண்ணே சிற்றறிவு தலைவியாகவும் இறைவன் றலைவனாகவுங் கூறப்பட்டுளது. மகளிர்க்கு மடமு மொருகுணமாதலிற் 'சிற்றறிவு' என்னப்பட்டது. மங்கைப்பருவமுறல்: பரிபக்குவ தசையடைதல். கவுமுதி: சந்திரிகை. களங்கத்தோடு கூடிய நிலவினின்று நீக்குதற்குத் 'துங்கக்கவுமுதி' யென்றது. கலாதரன்: சந்திரன்; (சந்திரகலையைத்தரித்த) சிவபெருமான். இருவினை யொப்பும் மலபரிபாகமு மெய்திய வான்மா இறைவனோடைக்கிய முறுமாறு முன்னிரண்டடிகளிற் கூறியமை காண்க.

## நான்காங்களம்.

பக்கம். உகசு:—பா - உசுங. இது வண்ணக வொத்தாழிசைக் கலிப்பா.

பக்கம். உகஎ:— " " இதன்கண் முதற் பத்துவரியுந் 'தரவு'. 'எவ்வுயிருக்' கென்பதுமுதற்'புக

மூமோ?' வென்ப திறுதியாகவுள்ள பதினறுவரிகளும் ஈரடியான்வந்த எட்டுத் 'தாழிசைகள்.' இவற்றின்கண்ணே சுயம்பிரகாசமுனிவர் மிகவும் விநோதமாகவுஞ் சாதுரியமாகவுங் கூறுநர்போல நற்குணங்களைச் செவ்விதிற் செவியறிவுறுத்துமாறுணர்க. 'காரிகை' யும், 'ஒருயி'ருங் கலாவதியைக் குறிக்கின்றன. 'இறைவன்: எப்பொருளினுந் தங்குபவன்' என்றார் **அடியார்க்கு நல்லாரும்.** இனி, 'வீற்றினிதிருந்த மங்கலம்,' 'மல்வென்றி,' 'மணமங்கலம்': இவை புறப்பொருட்டுறைகளாம். இவையீற்றி னிலக்கணங்களைப் **புறப்பொருள் வெண்பாமாலை**யிற் காண்க. 'விதுநிகர்.........சரசனே': இந்நான்கு வரிகளும் ஈரடியான்வந்த அராகங்கள்.

பக்கம். உகஅ:—பா-உசுரு. 'ஆருளும்?.......இறைவனிறு!': இவையனைத்தும் அம்போதரங்கம். இவற்றின்கண்ணே யுலகபாலருருக்கொடு நின்று உலகோம்புதலிற் சிதாநந்தனிடத்து இறைவன் குணங்க ளேற்றப்பட்டன. "திருவுடை மன்னரைக்காணிற் றிருமாலைக் கண்டேனேயென்னும்."—**திருவாய்மொழி.**

---

சிதாநந்தன்: திரோதாத்த நாயகன்.

கலாவதி: சுகுணை நாயகி.

## வாழ்த்து.

பக்கம். உகக:—பா-உசுச. தொகந்தப் பரிதிமால்: தொகந்தன் பரிதியையுந் திருமாலையும் முறையே யிருணீத்து உதவலினுந் துயர்நீத்துக்காத்தலினு மொத்தலி னிவ்வாறுரைக்கப்பட்டது. அன்றியும், 'பரிதிமால்' என்ற துணையானே யிந்நூலாசிரியர் பெயரும் உரிமையெனக் கொள்ளுநர் பெயருந் தொனிக்குமாறு காண்க.

" " பா-உசுரு. இதன்கண்ணே தமிழ் மொழியையொருநங்கையாகவும், இயலிசை நாடகமென்னும் அதன் முப்பகுதிகளையும் முறையே அந்நங்கையினது பருத்துப்பரந்து தோன்றும் மூன்றுறுப்புக்களாகவும் உருவகஞ் செய்திருத்தலை யுய்த்துணர்க.

" " பா-உசுசு. பொதுசந விசயை மண்டபம்: Victoria Public Hall. நம்மவை: வித்வந் மநோரஞ்சநீ சபை.

குறிப்புரை முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.



# செய்யுண்முதற்குறிப்பகராதி.

[உடுக்குறியுற்றன மேற்கோட்பாக்களாம்.]

திருச்சிற்றம்பலம்.



# பிழை திருத்தம்.

| உக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௩௬ | ௨ | வீணணுக்கு | வீணனுக்கு |
| ௩௮ | ௩0 | யோர்கள் ! | யோர்காள் ! |
| ௫௩ | ௨௭ | அறுபல்லவி | அநுபல்லவி |
| ௫௫ | ௨௩ | றவளமூரற் | நளவமூரற் |
| ௬௫ | ௧ | களம் - 3] | களம் - 4] |
| ௮௨ | ௪ | —தாநந்தன் | சிதாநந்தன் |
| ௮௨ | ௨௭ | பற் - றியிற் | பெற்றியிற் |
| ௮௭ | ௨௭ | —அவ | அவத் |
| ௧௧௨ | ௧௯ | யேடா | யேனடா |
| ௧௩௧ | ௨௭ | யமது | யுழது |
| ௧௩௩ | ௯ | மேநகிநி | மோகிநி |
| ௧௬௪ | ௧0 | மோதா | மேதா |
| ௧௬௫ | ௪௮ | விவ்லை | வில்லை |
| ௧௬௬ | ௩0 | மை! யா— | மையா!— |
| ௧௬௮ | ௩ | இறந்து! | இன்றது! |
| ௧௬௯ | ௧௧ | வென்றுநினை | வென்றுநுமை |
| ௧௮௯ | ௧௨ | மருகனப்பட் | மருகனகப்பட் |
| ௨0௪ | ௨௯ | களின்றுந் | களினின்றுந் |
| ௨௪௮ | ௧௯ | பெண்டிதரும் | பெண்டிரும் |

இந்நூலாசிரியர்

# இயற்றிய நூல்கள்.

---

| | | ரூ. | அ | பை. |
|---|---|---|---|---|
| 1. மணியசிவனார் கலிவெண்பா | ... ... | 0 | 0 | 6 |
| 2. தற்காப்புநியமம் | ... ... ... | 0 | 1 | 0 |
| 3. மணியசிவனார் சரித்திரம் | ... ... | 0 | 2 | 0 |
| 4. ரூபாவதி அல்லது காணமற்போனமகள் | ... | 1 | 0 | 0 |
| 5. கலாவதி | ... ... ... .. | 1 | 8 | 0 |
| 6. நாடகவியலுரை | (அச்சில்) .. | 0 | 8 | 0 |
| 7. பொய்த்தோற்றங்கள் | ,, ... | 0 | 1 | 0 |

8. மதிவாணன்கதை
9. குணவதி
10. சித்ராபகரணம்
11. முத்திராராட்சசம்
12. பார்வதீபரிணயம்

} சீக்கிரம் வெளிவரும்.

---